27th March 1961]

SRI A. A. RASHEED : வட ஆற்காடு ஜில்லாவில் மரமில்லாத மலைகள் எவ்வளவு உள்ளன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்தக் கணக்கு என்னிடம் இல்லை. கனம் அங்கத்தினர் அவர்களிடம் புள்ளி விவரம் இருந்தால் எனக்குத் தெரிவிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

*Steel Rolling Mill (Location)*

* 1113 Q.—SRI A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இம் மாநிலத்தில் புதிய ஸ்டீல் ரோலிங் மில் எங்கு நிறுவ உத்தேசமிருக்கிறது ?

(இ) என்ன செலவில் ?

(உ) இதற்கு மாகாண, மத்திய, வெளிநாட்டு உதவி எவ்வளவு ?

(எ) உற்பத்தியின் அளவு எவ்வளவு ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) The Government of India have been addressed to agree to license some mills of each with a re-rolling capacity of 20,000 tons per annum. Their decision is awaited. It is proposed to put up one of the mills in the Public Sector. Its location has not yet been decided. Now the Government of India have agreed to one mill in the Public Sector.

(இ) It is proposed to make provision of a sum of rupees one hundred lakhs in the Third Five-Year Plan for the proposed steel re-rolling mill in the Public Sector.

(உ) The entire cost of the public sector mill is to be met from State funds.

(எ) The mill in the public sector will have a capacity of about 20,000 tons per annum.

SRI A. VEDARATHNAM : இந்த பப்ளிக் செக்டர் தொழிற்சாலை எந்தயிடத்தில் ஆரம்பிக்கப்படும்? இப்பொழுது இருக்கிற ஸ்டீல் ரோலிங் மில்லை விஸ்தரிக்க ஏதாவது அரசாங்க உதவியுண்டா ? விஸ்தரிக்க திட்டமுண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN எந்தயிடத்தில் வைப்பது என்று இன்னும் நிர்ணயம் செய்யப்படவில்லை, பப்ளிக் செக்டரில் இருக்கக் கூடிய ரீ ரோலிங் மில்ஸ் பற்றி. இப்பொழுது நடந்து கொண்டிருக்கிற ரீ ரோலிங் மில்லை விஸ்தரிப்பதற்கு அந்த கம்பனியார் முயற்சிகள் எல்லாம் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

SRI N. K. PALANISAMI : May I know whether steps have been taken to increase the capacity of the steel rolling mills at Nagapattinam? Why not Government help them?

THE HON. SRI R. VENKATARAMAN : The hon. Member is saying something without perhaps knowing the facts. Government have already helped them to expand the steel rolling mill at Nagapattinam.

[27th March 1961

SRI T. K. SUBBIAH : ஸார், தனியார் துறையில் இந்த வேலையை நடத்துவதற்கு திருச்சி ஜில்லாவிலிருந்து மனுக்கள் வந்திருக்கின்றனவா, அவைகள் பரிசீலிக்கப்பட்டிருக்கின்றவா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அவ்விதம் மனுக்கள் வந்திருக்கும் என்று நம்புகிறேன். இது போன்று ஏராளமான மனுக்கள் வந்திருக்கின்றன.

SRI S. NAGARAJA MONIGAR : ஸார், இந்தத் தொழிற்சாலை ஆரம்பிப்பதற்கு போதிய வசதிகள் இருக்கவேண்டும் என்று இருந்தபோதிலும்கூட, நகரங்களை விட்டு அருகாமையில் இருக்கும் இடங்களில் இம்மாதிரிப்பட்ட தொழிற்சாலைகளை ஆரம்பிக்க சர்க்கார் கவனம் செலுத்துமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த ஆலோசனை எப்போதும் அரசாங்கத்தின் முன்னால் இருந்து கொண்டிருக்கிறது.

SRI A. VEDARATHNAM : ஸார், இப்போது இருக்கின்ற ஸ்டீல் ரோலிங் மில்லை விஸ்தரிப்பதற்கு அரசாங்கத்தினிடம் என்னென்ன உதவியை கேட்டிருக்கிறார்கள், அவற்றில் எவற்றை யெல்லாம் அரசாங்கம் ஒத்துக்கொண்டிருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : இது தனியார் துறையைப் பொறுத்த விஷயமாய் இருப்பதால், அவைகளை எல்லாம் இப்போது சொல்லுவதற்கில்லை.

SRI T. S. RAMASWAMY : May I know whether we are getting adequate quantities of billets for these mills?

THE HON. SRI R. VENKATARAMAN : We expect that with the commissioning of the three giant steel plants in the country, billets will be available and then the situation will ease.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : ஸார், இந்த ஸ்டீல் ரோலிங் மில்லுக்கு எந்தெந்த ஜில்லாக்களிலிருந்து எல்லாம் மனுக்கள் வந்திருக்கின்றன ?

THE HON. SRI R. VENKATARAMAN : மனுக்கள் நிறைய வந்திருக்கின்றன. அவைகளை எல்லாம் இப்போது சொல்லுவதற்கு சர்க்கார் தயாராக இல்லை.

DR. (SRIMATHI) T. S. SOUNDARAM RAMACHANDRAN : நிலக்கரியை கொண்டு வருவதற்கு பல இடங்களில் வண்டி கிடைப்பதில்லை என்கின்ற நிலைமை இருந்து கொண்டிருக்கிறது. அப்போது இதற்கு 60 ஆயிரம் பில்லட்ஸ் வேண்டுமே. அதைக் கொடுப்பதற்கு ஏதாவது கியாரண்டி கொடுக்கப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பெரிய தொழிற்சாலைகளை ஆரம்பிக்கும் போது இவைகளை எல்லாம் கவனித்துத்தான் நடவடிக்கை எடுக்கப்படுகிறது. தேவையான பில்லட்டுகள் காலா காலத்தில் கிடைக்கும் என்ற நம்பிக்கையோடுதான் இதற்கான முயற்சிகள் செய்யப்படுகின்றன.